இலவச வெளியீடு.

|| ஓம் நம: சிவாய ||

# சிவபரத்வம்

ஸ்ரீ சோபக்ருத் ஹு தை மீ சுக்லபஞ்சமி (19-1-64)
முதற்பதிப்பு 500 பிரதிகள்

பாமர ஜனங்கள் உண்மை தெரிந்து உய்ய வேண்டுமென்ற நோக்கத்துடன் இந்தச் சிறு வெளியீடு இலவசமாக வழங்கப்படும். இதில் கூறியிருக்கும் ஒவ்வொரு அபிப்ராயத்தையும் வேத, தேவார ஆதாரங்களுடன் ஸ்தாபிக்க முடியும்.

பிரதிகள் வேண்டுபவர் தபால் செலவிற்காக 12 ந.பை. தபால் ஸ்டாம்புகள் அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

வெளியிடுபவர்:

**தி. வி. அண்ணுஸ்வாமி சிரௌதி**

கோட்டூர் அக்ரஹாரம், துகிலி போஸ்டு,
நரசிங்கம் பேட்டை வழி, தஞ்சாவூர் ஜில்லா.

உ

|| ஓம் நமோ பகவதே ஹரதத்தாய ||

மழுபீடத்தின் மீதமர்ந்து
சைவஸ்தாபனம் செய்த ஆசார்யவர்யர்

# ஸ்ரீ ஹரதத்தர் ஸ்துதிகள்

## விருத்தங்கள் (1)

**உருகுமி ரும்புமுக் காலியி லமர்ந்து**
**பரமேச் வரனே பரதெய் வமென**
**திருமறைச் சான்றுகள் திடம்பட வுரைத்த**
**குருஹர தத்தர் திருவடி போற்றி.**

(2)

**அறுகுண பூர்ண ஞவான் அருமறை வணக்கங் கூறி**
**முறையிடு மீசன் த்யானம் மூவெழு யாகங் கட்கும்**
**இறைபர மேசன் என்றும் மறைமொழி காயத் ரீயும்**
**பிறையணி பவஊனப் போற்றும் பெருமைகள் பலவும் சொன்ன**
**குருஹர தத்தா சார்யார் திருவடி தஉலமேற் கொள்வாம்.**

## வெண்பா

**கருப்பட்ட நாள்முதலாய்க் கற்பகத்தின் கழல்காண**
**ஒருப்பட்ட மனத்தோடும் உருகினவர் - நெருப்பதனில்**
**இருந்துசிவ பரத்வத்தை எல்லோரும் உய்யஅருள்**
**புரிந்தஹர தத்தர்தாள் போற்றி.**

உ

|| ஓம் நம: சிவாய ||

|| ஓம் நமோ பகவதே ஹரதத்தாய ||

## சிவனும் விஷ்ணுவும் ஒன்றென்பது வேத ஸம்மதமா?

1. பரமேச்வரனுக்கு ஐந்து முகங்களும் அவைகளுக்குரிய மந்த்ரங்களும் வேதம் சொல்லுகிறது. விஷ்ணுவிற்கு ஒரு முகம்தான்.

2. பரமேச்வரன் ஆதி மத்ய அந்தரஹிதன் என்று வேதம் சொல்லுகிறது. விஷ்ணு பிரம்மாதிகள் பிறப்பார்கள், இறப்பார்கள் என்றும் வேதம் சொல்லுகிறது.

3. பரமேச்வரன் முக்கண்ணர் என்று வேதம் போற்றுகிறது; விஷ்ணுவிற்கு 3 - வது கண் சொல்லப்பட்டிருக்கிறதா?

4. ஈச்வரனென்ற பதம் பரமேச்வரனைத்தான் குறிக்கும். மற்றவர்களைக் குறிக்காது.

5. பரமேச்வரனுக்கு ஸமமான தெய்வம் கிடையாது. பரமேச்வரனுக்கு ஸமமாக விஷ்ணுப்ரம்மாதிகளைச் சொல்லக் கூடாதென்று வேதம் விதித்திருக்கிறது. இதற்குப் புறம்பாகக் கும்பகோணம் ஸ்வாமிகளும், அவரைப் பின்பற்றி மற்றும் பலரும் சிவனும் விஷ்ணுவும் ஒன்றென்று ஏன் சொல்லுகிறுர்கள்? “சிவனோடொக் கும் தெய்வம் தேடினுமில்லை" என்ற திருமந்த்ரத்துக்கு விரோதமாக மதுரை ஸ்ரீல ஸ்ரீ திரு ஞானஸம்பந்த ஆதீனமும், மற்றும் பல சைவப் பெரியார்களும் ஏன் பிரசாரம் செய்ய வேண்டும்?

6. மகாவிஷ்ணுவின் மத்ஸ்ய, கூர்ம, வராக, த்ரிவிக்ரம், ந்ருஸிம்ம அவதாரங்களைப் பரமேச்வரன் அடக்கினுர்; ஒடுக்கினுர் என்று உபநிஷத்துக்கள் முறையிடுகின்றனவே. பரமேச்வரனுடைய 64 மூர்த்தங்களில் இந்த அவதாரங்களை ஒடுக்கின மூர்த்தங்கள் சொல்லப்பட்டிருக்கின்றனவே; பன்றிக் கொம்பையும், ஆமை ஓட்டையும், திரிவிக்ரமர் கங்காளத்தையும், ந்ருஸிம்மத்தின் தோலையும் ஆடை ஆபரணங்களாப் பரமேச்வரன் அணிந்திருக்கிறாரென்று உபநிஷத்துக்கள் உத்கோஷிக்கின்றனவே. ஒடுக்கும் தெய்வமும் ஒடுக்கப்படும் பசுக்களும் எப்படி ஒன்றுவார்கள்?

உமையும் விஷ்ணுவும் ஒன்றென்றுல் உமைதான், மத்ஸ்ய கூர்மாதி அவதாரங்கள் எடுத்து ஈச்வரனுல் தண்டிக்கப் பட்டாளா? சிவனும் விஷ்ணுவும் ஒன்றென்றுல், சிவன் மத்ஸ்யாதி அவதாரங்கள் எடுத்துத் தன்னையே தண்டித்துக் கொண்டாரா? ஒன்றென்பதாக ஏன் அபத்தப் பிரசாரம் செய்ய வேண்டும்?

7. ஒவ்வொரு விஷ்ணு கல்ப்பம், பிரம்ம கல்ப்பம் முடிந்த பின் கணக்கில்லாத விஷ்ணுவின் கங்காளங்களையும் பிரம்ம கபாலங்களையும் பரமேச்வரன்

மாஐலயாக அணிந்துகொண்டு தாம் ஒருவரே நித்யமாக இருந்து தாண்டவம் புரிகிருர் என்று வேதம் சொல்லுகிறதே. சிவனும் விஷ்ணுவும் எப்படி ஒன்ருவார்?

8. பரமேச்வரன் யக்ஞேச்வரன்; விஷ்ணு யக்ஞம்; பரமேச்வரன் விச்வாதி கர் (விச்வாதிகோ ருத்ரோ மகர்ஷி:) விஷ்ணு விச்வம் என்று வேதம் கூறுகிறதே. இருவரும் எப்படி ஒன்ருவார்?

9. மகாவிஷ்ணு பரமேச்வரஐனப் பூஜித்து வைகுண்ட பதவி யடைந்தாரெ ன்றும், கண்மலரால் அர்ச்சித்துச் சக்ராயுதம் பெற்ருரென்றும் வேதம் சொல்லுகிறதே. எல்லோராலும் பூஜிக்கப்படும் பர தெய்வமும் பூஜிக்கும் பசுக்களும் எப்படி ஒன்ரு வார்?

10. “சிவ ஏகோ த்யேய: சிவம் கர: ஸர்வம் அந்யத் பரித்யஜ்ய ஸமாப்தா அதர்வசிகா" என்ற ஸித்தாந்த வாக்யத்துக்கு விரோதமாகக் கும்பகோணம் ஸ்வாமி கள் சிவஐனயும் விஷ்ணுவையும் அபேதமாகப் பூஜிக்க வேண்டுமென்று ஏன் பிரசாரம் செய்யவேண்டும்?

11. பரமேச்வரன் ஒருவரே பசுபதி; விஷ்ணு பிரம்மாதிகள் பசுக்கள் என்று வேதம் சொல்லுகிறதே. பசுபதியும் பசுவும் எந்த ந்யாயப்படி ஒன்ருவார்கள்?

12. பரமேச்வரன்தான் பரப்ரம்மம் என்று வேதம் முறையிடுகிறது. இந்த தாத்பர்யத்தை ஸ்ரீ ஸ்ரீகண்ட சிவாசார்யார் தமது சைவ பாஷ்யத்திலும், ஸ்ரீம தப்பய்ய தீக்ஷிதர் சிவார்க்கமணிதீபிகை யென்ற தமது வ்யாக்யானத்திலும் பிரம்ம தர்க்கஸ் தவம் என்ற தமது கிரந்தத்திலும் ஆணித்தரமாக எடுத்துக் காட்டியிருக்கிருர்களே. விஷ்ணு பரப்பிரம்மமென்று எந்த இடத்திலாவது சொல்லப்பட்டிருக்கிறதா?

13. ஸர்வக்ஞாதி ஷட்குண பரிபூர்ணன் என்று வேதம் பரமேச்வரஐனத்தா னே போற்றுகிறது; விஷ்ணுவைப் போற்ற வில்ஐலயே?

14. "யதா சர்மவத் ஆகர்சம்” என்ற உபநிஷத் சிவனருள் இல்லாமல் ஆனந்தம் இல்ஐலயென்று சொல்லுகிறதே.

15. விபூதி ருத்ராக்ஷம் அணியும் பிராம்மணர்கள், பரமேச்வரஐன வழி படாது வேறு தெய்வத்தை வழிபட்டால், “ஸ விப்ர: பாபியான்" என்று யஜுர் வேதம் சொல்லுகிறதே.

16. பரமேச்வரன் ஒருவர்தான் ஸகல ஜீவராசிகளின் ஹ்ருதயத்திலும் அந்தர்யாமியாக இருந்து, இயக்குவிக்கிருர் என்று வேதம் சொல்லுகிறது. மகா விஷ்ணுவின் ஹ்ருதயத்திலும் பரமேச்வரன் இருக்கிருரென்று நாராயணேபநிஷத் கூறுகிறது.

17. அஜாத இத்யேவ
உமாஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும்
தமீச்வராணும் பரமம் மஹேச்வரம்
பராத் பரதரோ பிரம்மா

முதலிய உபநிஷத் வாக்யங்கள் பரமேச்வரன் அருளால்தான் ஞானமும் மோக்ஷமும் நித்யானந்தமும் ஸித்திக்குமென்று முறையிடுகின்றனவே. வேதங்களுக்கு விஷ்ணுவைக் குறிப்பிடத் தெரியவில்லையா?

18. பரமேச்வரனை நித்ய 'யுவா' என்று வேதம் போற்றுகிறதே. விஷ்ணுவை அப்படிச் சொல்லுகிறதா?

19. பஞ்சக்ருத்ய தாண்டவ மூர்த்தியென்று வேதம் பரமேச்வரனைத்தானே போற்றுகிறது.

20. "நமோ ஹிரண்ய பாஹவே- - " என்ற உபநிஷத் வாக்யம் பரமேச்வரன் ஸ்வர்ணமயம் என்று சொல்லியிருக்கிறதே. விஷ்ணுவைக் கரியமால், செங்கண் மால், நீலமேக ச்யாமளன் என்றுதானே சொல்லுகிறது.

21. பரமேச்வரன் ஸத்வகுண மூர்த்தியென்றும் விஷ்னுவைத் தாமத குண மூர்த்தியென்றும் வேதம் சொல்லுகிறது.

22. "நமஸ்காரம்" பரமேச்வரனுக்கே உரித்து என்று வேதம் சொல்லுகிறது, யக்ஞ மந்த்ரத்தில் "யஸ்மை நம: தஸ்மை த்வாம் ஜூஷ்டநந்நியு நஜ்மி" என்றும், சூலகவம் என்ற கர்மாவில் "யஸ்மை நம: தத் சிர: என்றும் சொல்லுகிறது. ஹோமம் செய்யும் மந்த்ரங்களில் வருணய ஸ்வாஹா, அக்னயே ஸ்வாஹா - விஷ்ணவே ஸ்வாஹா என்று ஸாமான்யமாகச் சொல்லும் வேதம் பரமேச்வரனுக்கு ஹோமம் செய்யும்போது, "நம:" சப்தத்தை முன்னிட்டுக் கொண்டு "நமோ ருத்ராய பசுபதயே ஸ்வாஹா" என்று சொல்லுகிறது. எல்லா தேவர்களும் பரமேச்வரனைப் பூஜித்து அவரவர் பதவிகளைப் பெற்றுர்கள் பரமேச்வரன் யாரையும் பூஜிக்கவில்லை.

ஸ்மார்த்தர்கள் செய்யும் ஸந்த்யா வந்தனத்தில் வரும் "ஸர்வதேவ நமஸ்கார: கேசவம் ப்ரதிகச்சதி" என்ற ச்லோகம் யாரோ வைஷ்ணவப் பற்றுதல் உள்ள ஒருவர் சேர்த்த வெறும் ச்லோகமென்றும் வேதமந்த்ரமல்ல என்பதும் கும்பகோணம் ஸ்வாமிகளுக்குத் தெரியாதா?

23. விஷ்ணு ப்ரம்மர்கள் பரமேச்வரனுடைய திருவடி முடிகளைத் தேடிக் காணவில்லை யென்று வேதம் சொல்லுகிறது. தேடப்படும் தேஜோமூர்த்தியும், தேடும் பசுக்களும் ஒன்றாவார்களா?

24. பஞ்சாக்ஷரம் மகாமந்த்ரமென்று பஸ்ம ஜாபால உபநிஷத் அறிவுறுத்த (தாரகம் சைவம் மனும் உபதிசாமி) ஸமீப காலங்களில் கர்ப்பத்தினின்று வெளிவந்த

ராமகிருஷ்ணர்களுடைய நாம் அக்ஷரங்கள் தாரக மந்த்ரமென்று கும்பகோணம் ஸ்வாமிகள் சொல்வானேன்?

**25.** பரமேச்வரனுக்கு கர்ப்பவாஸம் ஒரு போதும் கிடையாது. "பிறவாதே தோன்றிய பெம்மான். பிறந்ததுமில்ஜல; பிறக்கவும் மாட்டார். விஷ்ணுவிற்குப் பிறப்பும் கர்ப்பவாஸமும் இருக்கின்றனவே

உமையும் விஷ்ணுவும் ஒன்று; சிவனும் விஷ்ணுவும் ஒன்றென்றல், ராம கிருஷ்ண அவதாரங்கள் எடுத்ததும் கர்ப்பத்தினின்று வெளிவந்ததும் உமையா? சிவனா?

**26.** பல பல உபநிஷத்துக்கள் விபூதியின் மகிமையைத் தானே போற்றுகின் றன. "திக் பஸ்ம ரஹிதம் பாலம்" என்று உபநிஷத் சொன்னதேயன்றி திக் நாம ரஹிதம் பாலம்" என்று சொல்லவில்ஜலயே.

**27.** இப்படியாக 1008 ஆதாரங்கள் சொல்லிக்கொண்டு போகலாம். மேலும் ஒரு வாக்கியத்துடன் நிறுத்திக் கொள்ளுகிறேன்.

**யோ வேதாதௌ ஸ்வர: ப்ரோக்தோ**
**வேதாந்தே ச பிரதிஷ்டித:**
**தஸ்ய ப்ரக்ருதி லீனஸ்ய**
**ய : பர : ஸ மஹேச்வர:**

என்பது உபநிஷத் வாக்யம்: "ய: பர: ஸ மகாவிஷ்ணு:" என்று சொல்லவில்ஜல.

## ஆதிசங்கர பகவத் பாதாள் ஸித்தாந்தம்.

மேலே எடுத்துக்காட்டிய வேதக் கருத்துக்களை யனுஸரித்தே ஆதி சங்கர பகவத் பாதாளும் தமது சிவானந்த் லஹரியில் பரமோபதேசம் செய்திருக்கிறுர்.

1. பரமேச்வரன் பிறப்பு இறப்பு இல்லாதவர், மற்றவர்கள் பிறப்பார்கள், இறப்பார்கள். “அஜனிம் அம்ருத ரூபம் ஸாம்பமீசம்” என்றுரே தவிர அஜனிம் அம்ருதரூபம் மகா விஷ்ணும் என்று சொல்லவில்லை.

2. ஜனன மரணப்பிணியைப் பிறந்து இறக்கும் தேவதைகள் தீர்க்கமாட்டார்கள். பிறவாத இறவாத பரமேச்வரன் தான் தீர்த்து மோக்ஷமளிப்பார்.

3. மோக்ஷத்தைக் கொடுப்பவர் பரமேச்வரரே. மற்ற தேவதைகள் "க்ஷத்ர பலதா:"

4. விஷ்ணுப்ரம்மாதிகள் பரமேச்வரனைப் பூஜித்து அவரவர் பதவிகளைப் பெற்றுர்கள். பரமேச்வரன் யாரையும் பூஜித்ததில்லை.

5. பிரம்ம விஷ்ணுக்களை ஸ்வப்னத்திலும் நினைப்பதில்லை. அவர்களும் காண்பதற்கரிய பரமேச்வரனுடைய திருவடி பஜனத்தைத்தான் எப்பொழுதும் வேண்டுகிறேன்.

6. பரமேச்வரனைத் தவிர மற்ற தேவதைகளை ஈச்வரனுக பாவித்து வழிபடுவது கிளிஞ்சல் சிப்பியை வெள்ளியென்றும் மாவு கலந்த நீரைப் பாலென்றும் பிரமை கொண்டு ஏமாறுவது ஆகும் - மூடத்தனம்.

7. பிரச்சேனுத்தர ரத்னமாலையில் கோ ப்ராம்மணை ருபாஸ்ய: என்ற கேள்விக்கு விடையாக "காயத்ரீ, அர்க்க, அக்னி கோசர: சம்பு:" என்று அருள் செய்திருச்கிறுரே தவிர "மகாவிஷ்ணு" என்று சொல்லவில்லை.

8. பரமேச்வரன் ஒருவரே பசுபதி (வயம் து பவச: அஸ்மாகம் த்வமேவ ஈச்வர :)

9. “பாணத்வம்” என்ற ச்லோகத்தில், மகாவிஷ்ணுவைப் பரமேச்வரனுடைய சிறந்த பக்தராகச் சொன்னுரேயன்றி சிவனும் விஷ்ணுவும் ஒன்றென ஒரு இடத்திலும் சொல்லவில்லை.

10. தசச்லோகியில் ஸாம்பே பரப்ரம்மணி என்றுரே தவிர, விஷ்ணௌ பரப்ரம்மணி என்று சொல்லவில்லை.

இவ்வாறெல்லாம் ஆதிசங்கர பகவத் பாதாள் ஸந்தேகத்துக் கிடமின்றி அழுத்தமாக சிவபரத்வம் உபதேசம் செய்திருக்க அவர் பீடத்தில் அமர்ந்திருக்கும் கும்பகோணம் ஸ்வாமிகள் அவர் ஸித்தாந்தத்துக்கு விரோதமாகவும், வேத வாக்கியங்களுக்குப் புறம்பாகவும் சிவனும் விஷ்ணுவும் ஒன்று என்று பிரசாரம் செய்ய வேண்டும்?

## சைவஸமயாசார்யார்கள்.

### தேவாரம் வேதஸாரம்

வேதக் கருத்துகளைத்தான் சைவஸமாயசார்யார்கள் தேவாரம் திருமுறைகளில் அமைத்தும்பாடியிருக்கிறுர்கள். சிவனும் விஷ்ணுவும் ஒன்றென்று எங்காவது பாடியிருக்கிறார்களா?

பூந்தேர்ந் தாயன கொண்டு நின்பொன்னடி (ஞான)
சேர்ந்தறியாக்கையானை திருமாலும் (மா.வா)
திருமாலும் பன்றியாய் (மா.வா)
கொள்ளேன் புரந்தரன் மாலயன்வாழ்வு (மா.வா)
வேதநான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே. (ஞான)
நூறு கோடியிரம்மர்கள் நொந்திஞர்
ஆறுகோடி நாரணர் அங்ஙனே (அப்பர்)
நற்றுணையாவது நம: சிவாயவே (அப்பர்)
சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோமல்லோம் (அப்பர்)
சிவனெடொக்கும் தெய்வம் தேடினுமில்லை (திருமூவர்)
பொன்ஞர் மேனியனே (ஸுந்தரர்)
பொன்னும் மெய்ப்பொருளும் தருவானை (ஸுந்தரர்)
நற்றவா உன்னை நான்மறக்கினும்
சொல்லும் நா நம : சிவாயவே (ஸுந்தரர்)

சைவப்பெரியார்களும், ஹிந்துமத போர்டாரும் தேவாரம் திருமுறைகளுக்கு மாறுக சிவனும் விவஷ்ணுவும் ஒன்றெனும் பிரசாரத்தில் ஏன் ஈடுபடவேண்டும்?

"அரியலால் தேவியில்லை" § என்ற ஒரு வாக்யத்தை ஸ்ரீலஸ்ரீ திருஞான ஸம்பந்த ஆதினம் உள்பட பலர் எடுத்துக் காட்டுகிறுர்கள்.
**[§ காமகோடி பத்திரிகை** 8-10-63, 19-11-83, **பக்கம்** 5.]

அரியலால் தேவியில்லை - யாருக்கு - ஐயன் ஐயாறஞர்க்கு என்றுர் அப்பர் ஸ்வாமிகள். அதனுடைய அர்த்தம் என்ன? திருவையாறு க்ஷேத்ரத்தில் மகா விஷ்ணு பஞ்சநதேசரைக் குறித்துத்தவம் செய்து – வாம பாகத்தில் இடம் பெற்று "பார்யாத்வம்" அடைந்தார். சிவானந்தலஹரி சலோகத்துக்கும் இவ்வளவுதான் அர்த்தம். 1008 சிவாலயங்களில் கோயில் கொண்டிருக்கும் பரமேச்வரிகள் எல்லாம்

விஷ்ணுமூர்த்திகள் என்று அர்த்தமல்ல. ஆறுகோடி நாராயணர் நொந்தினவர்கள் உமாதேவிகள் அல்ல.

## பாவை மகாநாடுகள்

சைவ வைஷ்ணவ ஒற்றுமை ப்ரசாரம் என்று சொல்லிக் கொண்டு கும்ப கோணம் ஸ்வாமிகள் சில வருஷங்களுக்கு முன் திருஎம்பாவை திருப்பாவை மகாநாடு ஆரம்பித்து வைத்தார். பல பல சிவன் கோயில்களில் மகாநாடுகள் பிரமாதப்படுகின்றன.

## ஆவச்யகம்

சிவபக்தர்கள் பரமேச்வரஊயும் வைஷ்ணவர்கள் விஷ்ணுவையும் தேவி உபாஸகர்கள் தேவியையையும் ஸுப்ரமண்ய பக்தர்கள் ஸுப்ரமண்ய ஸ்வாமியை யும் வழிபட்டால் போதாதா? அந்த அந்த தெய்வம் அவரவர்களுக்கு அருள் செய்யா தா? அம்மாதிரி திருடமான பக்தியுடன் வழிபடுவதில் கும்பகோணம் ஸ்வாமிகள் என்ன குறை கண்டுவிட்டார்? ஒரு மதத்தினர் தங்கள் மதத்தில் சொல்லப்பட்ட ஒரு தெய்வத்திடம், திருடமாக பக்தி செய்வதை விட்டு எதற்காக இரண்டு தெய்வங்கஊ ஸமமாகவும் ஒன்றெனவும் வழிபட வேண்டும்.

## உபதேசம் யாருக்கு?

இந்த ஒன்றெனும் உபதேசம், விபூதியிடும் ஸ்மார்த்தர்களுக்கா, அல்லது வைஷ்ணவர்களுக்கா?

ஸ்மார்த்தர்கள் பல்லாயிரம் தடவைகள்,

1. ராமாயணம், பாரதம், பாகவதம், பகவத்கீதை, ஹரிவம்சம், நாராயணீ யம் முதலிய விஷ்ணுபரமான கிரந்தங்களில் தானே பெரும்பாலும் ஈடுபடுகிறுர்கள்?

2. ராதா கல்யாணம், ஸீதா கல்யாணம், ருக்மிணி கல்யாணம், விஷ்ணு பஜஊகளில்தானே ஈடுபடுகிறுர்கள்.

3. விஷ்ணு பத்தர்கள் சரித்திரங்கஊத்தானே பல்லாயிரம் தடவை கேட்கிறுர் கள்.

4. புரந்தரதாஸ், மீராபாய், துளஸிதாஸ், தியாகய்யர், ஆஞ்சனேயர் முதலிய விஷ்ணு பக்தர் தினங்கஊத்தானே வருஷந்தோறும் கொண்டாடுகிறுர்கள்.

5. விஷ்ணு ஸஹஸ்ரநாமம், ஸுந்தரகாண்டம் தானே பாராயணம் செய் கிறுர்கள்.

6. வைஷ்ணவ விரதங்களைக் கொண்டாட வில்லையா? (ஸ்ரீ ராமநவமி, கிருஷ்ணஷ்டமி, வைகுண்ட ஏகாதசி, த்யாக ப்ரம்ம உத்ஸவம், ஆஞ்சனேய உத்ஸவம் இத்யாதி)

(மகா சிவராத்ரி கொண்டாடவில்லையா என்று கேட்க வேண்டாம் மகாசிவ ராத்ரியன்றும் ஸ்மார்த்தர்கள் விஷ்ணு பஜனைதான் செய்கிறுர்கள்).

7. பல ஸ்மார்த்தர்கள் சனிக்கிழமை யென்றும், அஷ்டமி, நவமி, ஏகாதசி யென்றும் நாமம் போட்டுக் கொள்ளவில்லையா?

ஆகவே ஸ்மார்த்தர்களுக்கு சிவனும் விஷ்ணுவும் ஒன்று என்ற உபதேசத்து க்கு அவசியமே இல்லை.

வைஷ்ணவர்களுக்கு உபதேசம் என்றுல், மகாவிஷ்ணுவிடம் திருடமான பக்தியுள்ள வைஷ்ணவர்கள் எதற்காக வேறு தெய்வத்தை பூஜிக்கவேண்டும்? கும்பகோணம் ஸ்வாமிகள் பிரசாரம் கேட்டு விஷ்ணு பக்தர்கள் பரமேச்வர வழிபாடு செய்கிறுர்களா? சிவ விரதங்கள் அனுஷ்டிக்கிறுர்களா? மகா விஷ்ணுவின் விக்ரஹத் துக்கு விபூதிப்பட்டை சாத்தி சிவ அஷ்டோத்தரம் சொல்லி பில்வார்ச்சனை செய்வார் களா? ஒரு வைஷ்ணவராவது - மகா சிவராத்திரியன்றுவது விபூதியிட்டுக் கொண்டு சிவதர்சனம் செய்கிறுரா? கும்பகோணம் ஸ்வாமிகள் உபதேசத்தை ஒருபோதும் ஏற்றுக்கொள்ள மாட்டராகள். ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியமும் இல்லை. வைஷ்ணவர்களுடைய திருடமான பக்தியைப் பாராட்டுகிறேன். அவர்களைப்போல் விபூதியிடும் ஸ்மார்த்தர்களுக்குப் பரமேச்வரனிடம் திருடமான பக்தியில்லாதது ஏனே! சிவபரத்வத்தில் நம்பிக்கையுள்ள ஓர் ஆசார்யபுருஷர் இல்லாததுதான் காரணம்.

## பாவை மகாநாடுகள் கூடுவதால் என்ன பயன்?

கும்பகோணம் ஸ்வாமிகள் ஆரம்பித்து வைத்த திருஎம்பாவை, திருப்பாவை மகாநாடுகளை, ஸ்மார்த்தர்களும் சைவர்களும் சேர்ந்து சிவன் கோயில்களில் நடத்து கிறுர்களே. எந்த விஷ்ணு கோயிலிலாவது நடைபெறுகின்றனவா? வைஷ்ணவர்கள் நடத்த விடுவார்களா?

சிவன் கோயில்களில் திருப்பாவைப் பாடல்களை மைக்கில் வைத்து ஊர் முழுதும் அலறச் செய்கிறுர்களே. விஷ்ணு கோயில்களில் திருவெம்பாவைப் பாடல்களை ஒலி பரப்புகிறுர்களா?

அந்த அந்த மதத்தினர் அவரவர் தெய்வத்தை - அவரவர் முறைப்படி வழிபடுவதில் - கும்பகோணம் ஸ்வாமிகள் என்ன குற்றத்தைக் கண்டுவிட்டார்? ஒருவர் இரண்டு தெய்வங்களை வழிபட அவசியம் என்ன? ஹிந்து மத போர்டார் அனுமதித்து மகாநாடுகள் கூட்டிப் பல ஊர்களிலிருந்து வேறு பல ஊர்களுக்குப்

பிரஸங்கம் செய்பவர்களை வரவழைத்து அவர்களுக்குப் பிரயாணச் செலவு, பந்தல் விளக்கு, போஜனம். ஊர்வலம், விளம்பரம் முதலான எல்லா செலவுகளும், பண்டைய காலத்திலும் அவ்வப்போதும் பக்திமான்கள் சிவன் கோயிலில் அவசிய மான செலவுகளுக்காக எழுதிவைத்த - ஈச்வர சொத்திலிருந்து விரயம் ஆவதுதான் அடையும் பலன்.

## சில கேள்விகள்

1. விஷ்ணுவும் சிவனும் ஒன்று என்று சொல்பவர்கள், விஷ்ணுவும் இந்திரனும் ஒன்று என்று சொல்லுகிறுர்களா?

2. ஈச்வரனே கல்ப்பிதம்; பிரம்மம் ஒன்றுதான் ஸத்யம்; தானே அந்த ப்ரம்மம் என்று சொல்பவர்க்கு ஷண்மத ஸ்தாபகர் என்ற பிருது எப்படிப் பொருந் தும்? பிரம்ம மத ஸ்தாபகர் அல்லது அத்வைத ஸ்தாபகர் என்ற பிருதுதான் பொருந்தும்.

3. இரண்டு ராஜீயக் கக்ஷிகள் ஒரு விஷயத்தில் ஒன்று சேர்வதுபோல், சைவ வைஷ்ணவ ஒற்றுமை யென்பது காலத்தை யனுஸரித்து மத ஸம்பந்தமான ஓர் கக்ஷி பிரசாரமா?

சுயமரிவாதைக் (Self respect) கட்சிபோல், நானே பிரம்மம் என்பது ஒருவகைக் கக்ஷிப் பிரசாரமா?

4. சிவ ஸந்நிதானத்தில் பரமேச்வரனுக்கு மேல் விஷ்ணு உயர்ந்தவர் என்று சொல்ல வாயெடுத்த வியாஸருக்கு நாக்கு இழுத்துக் கொண்டதுபோல், சிவ ஸந்நிதானத்தில் இதர பரத்வம் பேசுபவர்களுக்கு நாக்கு இழுத்துக் கொண்டு போகும் என்ற பயம் இருந்தால் சிவன் கோயில்களில் ராமாயணம், பாரதம், பகவத்கீதை, பாகவதம் முதலிய ப்ரவசனங்கள் - கர்ப்பவாஸத்தில் வந்த ராமரையும் கிருஷ்ணரை யும் பரமாத்மா வென்று போற்றி நடைபெறுமா? "திக் வித்யாம் அசிவாச்ரயாம்" என்று உபநிஷத் கூறுகிறதே. -

திருமயிலைக் கபாலீச்வரர் ஆலயத்தில் சிவபரமான உபந்யாஸங்களுக்கன்றி ராமாயண, பாகவத உபந்யாஸங்களுக்கு இடம் தர மாட்டார்களென்பது சிவ பக்தர்கள் எல்லாரும் மனம் பூரிக்க வேண்டிய விஷயம்.

5. கர்ப்பவாஸம் இருந்து, வெளி வந்து, பிறந்து, வளர்ந்து பிள்ளைக் குட்டிகள் பெற்று இறந்த ராமகிருஷ்ணர்கள் ஈச்வரன் ஆவார்களா? அவர்களுக்குக் கோயில் கட்டி வழிபட்டால், அவர்கள் புத்ரர்களான குட்டி தெய்வங்களுக்கும் அந்தக் கோயில்களில் இடம் வேண்டாமா?

**6.** கும்பகோணம் ஸ்வாமிகள் விபூதி ருத்ராக்ஷம் அணிந்து சந்திரமௌளீச்வரர் பூஜை செய்கிறர். சைவம் உள்பட ஷண்மத ஸ்தாபகர் என்ற பிருதை வகிக்கும் அன்னர், விபூதியிடும் சிஷ்யர்களுக்காவது - சிவ பூஜை செய்யுங்கள், பஞ்சாக்ஷரம் ஜபம் பண்ணுங்கள் என்று உபதேசம் செய்யாமல் ராம நாமம் கோடி கோடியாக எழுதி மலை மலையாகக் குவியுங்கள் என்று தானே சொல்லுகிறர். பஞ்சாக்ஷரம் தாரகமந்த்ரம் என்று வேதம், உபநிஷத்துக்கள் சொல்லின; ராம கிருஷ்ண நாமாக்ஷரங்கள் தாரகம் என்று வேதம் சொல்லிற்ற?

**7.** விஷ்ணு ஸஹஸ்ரநாமம், ஸுந்தரகாண்டம் பாராயணம் பண்ணுங்கள் என்று உபதேசம் பண்ணுகிறரே - ஆதிசங்கர பகவத்பாதாள் அருளிய சிவானந்த லஹரி பாராயணம் பண்ணுங்கள், சிவ ஸஹஸ்ர நாமம் பாராயணம் பண்ணுங்கள், சிவ பஜனம் செய்யுங்கள், சிவன் புகழைப் பாடுங்கள் என்று சொன்னதுண்டா?

**8.** சைவம் முதலாக ஷண் மத ஸ்தாபகர் என்ற பிருது வகிக்கும் இவர் சைவம் தழைக்கும் வண்ணம் செய்யும் பிரசாரம் தான் என்ன?

**9.** திருஎம்பாவை திருப்பாவை மகாநாடு இவர் ஆரம்பித்து வைத்து – சைவர்கள் மாத்திரம் ஊக்கத்துடன் நடத்துகிறர்களே. திருஎம்பாவை பாடிய மாணிக்க வாசகர் - திருவாசகத்தில் எந்த இடத்திலாவது சிவனும் விஷ்ணுவும் ஒன்று என்று சொல்லியிருக்கிறரா?

ஸ்ரீமதி ஆண்டாளாவது தன் பாசுரங்களில் விஷ்ணுவும் சிவனும் ஒன்றெனப் பாடியிருக்கிறர்களா? என்ன பாவை மகாநாடு! என்ன ஒற்றுமைப் பிரசாரம்!!

“ஒற்றுமை” என்ற பதத்திற்கு "ஒன்று" அர்த்தமா?

**10.** சைவ வைஷ்ணவ ஒற்றுமைக்காக பாவை மகாநாடு ஆரம்பித்து வைத்தவர். வைஷ்ணவர்களுக்குள் வடகலைத் தென்கலைக் கொள்கைகளை ஒற்றுமைப்படுத்தி விட்டாரா? வைஷ்ணவ மதத்தைப்பற்றிப் பேச இவருக்கு உரிமை உண்டென்று வைஷ்ணவர்கள் ஒப்புக்கொள்வார்களா? அதே போல் வைஷ்ணவ ஸந்யாஸம் வாங்கிக் கொண்டு சிவதீக்ஷையில்லாத இவருக்கு சாஸ்திரங்களைப்பற்றிப் பேச உரிமை ஏதென்று பல சைவர்கள் வாய்விட்டுக் கேட்காத போனலும் மனதில் எண்ணமல் இருப்பார்களா? “சிவதீக்ஷை பெற்ற சிவாசார்யார்கள் செய்யும் சிவாலய கும்பாபிஷேகங்களில், சிவ தீக்ஷையில்லாத கும்பகோணம் ஸ்வாமிகளுக்கு என்ன ஸம்பந்தம்?" என்று சில சிவாசார்யார்கள் என்னிடமே சொன்னர்கள்

**11.** "பிறைதங்கு சடையானை வலத்தே வைத்து” என்ற பதங்களைச் சொல்லி - ஆக இருவரும் ஒன்றெனப் பேசுகிறர்களே. ஒருவரை யொருவர் வலமோ, இடமோ, மடியிலோ தலையிலோ வைத்துக் கொண்டால் இருவரும் ஒருவர் என்று எப்படிச் சொல்லலாம்? மேலும் விஷ்ணு தபஸ்பண்ணி, பரமேச்வரனுடைய வாம பாகத்தில் இடம் பெற்றர் என்பது உண்மை. ஈச்வரனு தபஸ்செய்து விஷ்ணுவின்

வலது பாகத்தில் இடம் பெற்ருர்? இருவரில் இடம் கொடுத்தவர் யாவர்; இடம் பெற்றவர் யாவர்? இருவரும் எப்படி ஒன்ருவார்?

12. விஷ்ணுகோவில்களில் திருப்பாவை தினம் பாடட்டும் மார்கழி மீ திருப்பாவை உபந்யாஸங்கள் நடைபெறட்டும்.

அதே போல் சிவன் கோவில்களில்

திருஎம்பாவை பாடட்டும்; உபந்யாஸங்கள் நடக்கட்டும், ஏதற்காக திருஎம் பாவை, திருப்பாவை கூட்டு மகாநாடு?

## முடிவுரை

இன்னும் பல கேள்விகள் கேட்டுக்கொண்டு போகலாம், பரமேச்வரனுடைய சின்னங்களான விபூதிருத்ராக்ஷம் அணியும் சிவபக்தர்களுக்கு சிவபரத்வம் போதிக் கும் யோக்யதை மனேதிடம் உள்ள ஒரு ஆசார்ய புருஷன் இல்லாதது. மிகவும் வருந்தத்தக்கது.

அடியேன் கும்பகோணம் ஸ்வாமிகளிடம் மிகுந்த பக்தி கொண்டவன் தான். விபூதி ருத்ராக்ஷம் அணிந்து காக்ஷியளிக்கும் அவரைப் பரமேச்வர ஸ்வரூபி யென்றே போற்றுகிறேன். பல ஸமயங்கள் அவரிடம் அனுக்ரஹங்கள் பெற்றிருக்கி றேன். சிவனும் விஷ்ணுவும் ஒன்றென - அனுவசியமான பிரசாரம் செய்வதைத்தான் ஒப்புக் கொள்ளவில்லை. ஷண்மத ஸ்தாபகர் என்றபிருது வகிப்பவர் சைவர்களுக்கும் ஆசார்யராக இருந்து சிவபரத்வம் போதிக்கட்டும். அதில் நம்பிக்கையில்லாத போனுல், பஞ்ச மத ஆசார்யராகத் திகழட்டும். ஒருவர் ஆறு மதத்தினரைத் திருப்தி செய்யமுடியாது. வேதத்தில் கூறப்பட்ட உண்மை ஒன்றுதான். சிவதத்வம்தான்.

"ஸர்வோபநிஷதாம் ஸாரம் சிவ தத்வம் பவேத்" வேதம் நான்கிலும் மெய்ப் பொருளாவது நாதன் நாமம் நமச்சிவாயவே, இந்த உண்மைகளை ஸ்ரீ ஹரதத்தாசார் யார் மழுபீடத்தின் மீதமர்ந்து ஸ்தாபித்தார்.

எட்டுகிரஹங்கள் சேர்க்கையால் உலகத்திற்குத் துன்பம் ஏற்படக்கூடாதென்று வேயுறு தோளிபங்கன் பதிகம் பாடும்படி கும்பகோணம் ஸ்வாமிகள் எல்லா இடங்களிலும் ஏற்பாடு செய்தார். (ஆபத்து ஸந்யாஸம் போல்) ஆபத்துக் காலத்திற்கு மாத்திரம் சொன்ன உபதேசமா, அந்தப் பதிகத்தில் நிரந்தரமான நம்பிக்கைகொண்ட உபதேசமா?

“என்பொடு கொம்பொ டாமை யிவை மார்பிலங்க" என்று திருஞானஸம்பந்தர் பாடியதை ஏற்றுக்கொள்ள வேண்டாமா?

கும்பகோணம் ஸ்வாமிகள் சொன்ருரென்று எந்த விஷ்ணு கோயிலிலாவது கோளறு பதிகம் பாடினுர்களா?

இனியாவது உண்மை சிவதத்வங்களை தாக்ஷிண்யமில்லாமல், வேறு மதத்தினரைத் திருப்திசெய்ய வேண்டுமென்ற நோக்கத்துடன் இல்லாமல் பிரசாரம் செய்து எல்லாரும் பரம ஸௌக்யம் அடையும்படி செய்வாராக!

.................................................. அரன் நாமே
சூழ்க வையகம் துயர் தீர்கவே. (ஞான)

**தி. வி. அண்ணுஸ்வாமி சிரௌதி**

## ஹரதத்தர் பக்தஜன ஸபை வெளியீடுகள்

1. ஸ்ரீ ஹரதத்தர் சரித்திரம் (சுருக்கம்)

2. ஸ்ரீ ஹரதத்தர் சிவலிங்க பூஜை (வர்ணப்படம்)

3. நவரத்னமாலை

4. பூஜா கல்ப்பம்

5. சுருதிஸூக்தி மாலை (நாகரம்) மூலம் மாத்திரம்

6. சிவபஜனாம்ருதம்

   முதல் பாகம் சிவபஜனை, திவ்யநாமம்
   இரண்டாம் பாகம் மீனாக்ஷிகல்யாணம்
   அனுபந்தங்கள்

7. சிவகவச் சால்வைகள்
   (ஹர, சிவ நாமங்கள் அச்சடித்தவை)
   5 முழம் × 2½ முழம்
   4 முழம் × 2 முழம்

8. மீனாக்ஷி ஸ்துதி - தச ச்லோகீ (நாகரம்)

9. கௌரி கல்யாணம் முதலிய சில பாடல்கள்

**தி. வி. அண்ணாஸ்வாமி சிரௌதி**
பணியாளர், ஸ்ரீ ஹரதத்தர் பக்தஜன ஸபை
N. R. 22 - A, ஏர்போர்ட்டு க்வார்ட்டர்ஸ்,
மீனம்பாக்கம், சென்னை - 27.